# அறைக்குள்ளிருந்தவன்

பெங்களூர் 'சிக்பெட்' டின் அந்தச் சிறிய சந்து அவள் கண் முன் விரிந்தது. பெரிய தெருவின் கும்பலிலிருந்து மீண்டும் இதனுள் நுழையும் முன்பே ஒரு கையால் மூக்கையும், இன் னொரு கையால் புடவையையோ, வேஷ்டியையோ தூக்கிப் பிடித்துக்கொண்டு வரவேண்டிய சந்து அது. ஒரு கையில் பள்ளிப் புத்தகங்களைத் தாங்கிக்கொண்டு – பை கொண்டு போவது நாகரீகம் இல்லை. எவ்வளவு புத்தகங்களானாலும் கை வலிக்க எடுத்துப் போவதுதான் அவள் பள்ளி செல்லும் காலத்து வழக்கம் – இன்னொரு கையால் பாவாடையைத் தாவணியோடு தூக்கிப் பிடித்தவாறே வீடு வரும்வரை மூச்சு விடாமல் ஓடுவாள் அவள்.

வீடு ஒன்றும் 'ஆஹா' என்று மூச்சை விடும்படியானது இல்லை. முன் அறையில் பாதி இடம் அம்மா விற்பதற்கு இட்டு வைத்த அப்பளங்களைப் பரப்பவே போய்விடும். மீதி இடத்தில் அப்பா முடங்கிக் கிடப்பார்.

அப்பாவின் பேச்சோ, முனகலோ, முகபாவமோ ஒன்றும் சரியாக நினைவு வருவதில்லை.

ஒரு நாள் மழையில் நனைந்துகொண்டு தாவணித் தலைப் பில் புத்தகங்களை மூடியவாறே ஓடி வந்ததும், வீட்டில் அடி எடுத்து வைத்தவுடன் முன் கூடத்தில் அப்பளங்கள் எல்லாம் இல்லாமல் அப்பா மாத்திரம் நீண்டு படுத்திருந்ததும், இவளைப் பார்த்தவுடன் துளிக்கூட அழாமல் அம்மா, "அவர் கதை முடிந்தது" என்று அவரை நோக்கிக் கையைக் காட்டியவுடன் அவள் பார்த்த அப்பாவின் முகம்தான் நினைவு வருகிறது.

அவர் அன்று மூச்சு விடுவதை நிறுத்தினார். அவ்வளவுதான். அதற்கு முன்பே அவர் வாழ வேண்டும் என்ற ஆசை மடிந்து செத்தாகி விட்டது.

எல்லா வசதிகளுமுடைய விசாலமான சமையலறையில் அமர்ந்து கொண்டு, குளிர் பதனப்பெட்டியிலிருந்து எடுத்த பழ ரஸத்தைச் சுவைத்துக்கொண்டிருந்த தனக்கு அந்த நாற்ற சந்தும், என்றோ செத்துப்போன உபயோகமில்லாத அப்பாவும் நினைவு வந்தது அவளுக்கே வேடிக்கையாக இருந்தது. அவளுக்கு இங்கே என்ன குறை?

"கொன்னூடுவேன்...... கத்தியாலே துண்டுதுண்டா நறுக்கி... டேய்... வேண்டாண்டா... அழுவேன்..."

அந்த வீட்டின் மூலையிலிருந்த அறையிலிருந்து சத்தம் வர ஆரம்பித்துவிட்டது.

அவள் மெல்ல எழுந்து சென்றாள்.

முன் கூடத்தில் மாமியார் உட்கார்ந்து அந்த வாரப் பத்திரிக்கை ஒன்றைப் படித்துக்கொண்டிருந்தாள்.

"'அவன்' கத்தறான். என்னன்னு போய்ப்பார்." என்றாள். அறைக்கு அருகில் சென்று அதில் இருந்த ஒரே ஒரு ஜன்னலை மெல்லத் திறந்து எட்டிப்பார்த்தாள்.

வேஷ்டி நெகிழ்ந்து விழ, அறையில் அங்கும் இங்கும் கத்திக் கொண்டே ஓடிக்கொண்டிருந்தான் 'அவன்'.

"உஷ்... சத்தம் போடக் கூடாது."

'அவன்' 'சட்' டென்று திரும்பிப் பார்த்தான்.

உதட்டில் கை வைத்து, கூடத்துப் பக்கம் கையைக் காட்டி "திட்டுவா அப்புறம். பேசாம இருக்கணும்" என்றாள்.

"என்னை வெளியிலே விட்டுடேண்டி..."

"கதவு கெட்டுப் போயிடுத்து. தொறக்க முடியாது."

'அவன்' ஜன்னலருகே வந்தான்.

"நேக்கு ஒரு சுத்தி தா. நான் ஒடைச்சுடுவேன்."

"ம்ஹூம்" என்று மறுத்தாள்.

ஜன்னல் வழியாகக் கையை நீட்டி அவள் கழுத்தில் தொங்கிய சங்கிலியைப் பற்றினான்.

"இது தாயேண்டீ..."

அவன் பிடியில் அகப்பட்டுக்கொண்டிருந்த அந்தச் சங்கிலியை அவள் குனிந்து பார்த்தாள். தங்க குண்டுகள் கோர்க்கப்பட்டு, லிங்கம் வரைந்த 'ப' வடிவச் சின்னம் அதில் இருந்தது.

அவன் முரட்டுக் கரத்திலிருந்து அதை விடுவித்தாள். "அப்படி எல்லாம் கேட்கக் கூடாது. அம்மா திட்டுவா"

'அவன்' மெல்லக் கிசுகிசுத்தான்.

"நானும் நீயுமா அம்மாவைக் கொன்னுடலாமா?"

"ஓ. ஆனாக்கா சும்மா பேசாம இருக்கணும். இல்லாட்டா இல்லை."

"சரி. நீ கத்தி கொண்டுவா, உம்?"

தலையை ஆட்டிவிட்டு ஜன்னலைச் சாத்தினாள். திரும்ப சமைய லறைக்குப் போகும் வழியில் மார்பின் மீது நெளிந்த அந்தச் சங்கிலி யைப் பார்த்துக் கொண்டாள்.

ஹா! வறுமை எப்படிப்பட்ட ஒன்று! பசி! வயிறு புதையுண்டு போக, நாவின் சுவைக் காம்புகள் மண்ணைக் கண்டாலும் ஊறலெ டுக்க, பிச்சைக்காரன் குவளையிலிருக்கும் கதம்பச் சோறுகூட வயிற் றில் விழக்கூடிய சுவையுள்ளதாகத் தோன்றும் பசியை அவளுக்குத் தெரியும்.

அம்மா அவளிடம் "அப்பாவும் போயாச்சு. அவர் வைத்தியத்துக் கான கடன் தலைக்கு மேலே இருக்கு. புஸ்தகத்தை எல்லாம் கட்டி மூலையிலே வை" என்று சொன்னபோது புத்தகங்களைக் கட்டிக் கொண்டு அழுதாளே, அம்மாவை வாய்விட்டுச் சபித்தாளே, அப் போது கூட இப்படி ஒரு வறுமையை அவள் கற்பனை செய்யவில்லை. அப்படி மூன்று வருடங்கள்...

அப்படி அதன் பின் இந்த வீட்டில் சமையற்காரியாக இருந்தாள். சம்பளத்தில் முக்கால் பகுதி கடன் அடைக்கப்போய்விடும். இரண் டொரு முறைகள் அம்மாவுடன் கூடமாட வேலை செய்ய அவளும் வந்ததுண்டு.

அப்படி ஒரு முறை வந்தபோதுதான் அந்த வீட்டு யஜமானி கேட் டாள்.

சமையலறைக்கே வந்து இடுப்பில் கை வைத்தபடி, "என்ன ரங்கம்மா, இவளுக்கு என்ன வயசு?" என்றாள்.

"பத்தொம்பது மாமி. நடு நடுவே பணம் இல்லாம படிப்பு விட்டுப் போயிடுத்து. இல்லாட்டா இப்போ வேலையிலே இருப்பா. படிப்பும் அரைகுறையாப் போச்சு. யாராவது உங்களை மாதிரி இருக்கிறவா படிக்க வைச்சா உண்டு...!"

பேச்சுக்கு இடையில் தன் தேவைகளை உணர்த்துவதில் அம்மா வுக்கு நிகரே கிடையாது.

"என்ன படிப்பு வேண்டியிருக்கு? சமர்த்தா லட்சணமா இருக்கா. என் பிள்ளைக்குத் தரயா?"

அயர்ந்து போய் நின்றாள் அம்மா.

மூன்று பிள்ளைகள் அந்த வீட்டில். மூத்தவனை அவள் பார்த்ததே கிடையாது. அவன் கத்தலை மட்டுமே கேட்டதுண்டு. இரண்டாம் பிள்ளையும் மூன்றாம் பிள்ளையும் ஏதோ பெரிய படிப்புப் படித்துக் கொண்டிருந்தார்கள்.

நடுங்கும் குரலில் "எந்த பிள்ளையைச் சொல்லறேள்?" என்றாள் அம்மா.

"மூத்தவனைத்தான். அவனைக் கவனிச்சுக்கவும் ஒரு ஆள் வேணுமோ இல்லையோ? என் மனசு என்னிக்குமே எளகிய மனசு. உன் நிலைமை எனக்குத் தெரியும். உன் பெண்ணுக்கும் என்னாலே விடிவு வரட்டுமே? வேற பொண்ணு கிடைக்காதா என்ன? கிடைக் கும். ஒரு ஏழைப் பொண்ணு நம்மாலே நல்லபடியா வாழட்டுமேன்னு தான் சொல்றேன். என்ன சொல்றே?"

"யோசிச்சு... யோசிச்சு..." என்று அம்மா திணறினாள்.

"மாசாமாசம் உனக்குப் பணம் அனுப்பிடுவேன். நீ இப்படி வேலை பண்ண வேண்டாம்."

"நாளைக்குச் சொல்றேனே மாமி."

"சரி."

அம்மா பெண்ணைத் திரும்பிப் பார்க்கவே இல்லை. பேசவே இல்லை. அன்று இரவு வீட்டில் வெறும் காய்ந்த ரொட்டித் துண்டையும் தண்ணீரையும் சாப்பிட்டுவிட்டுப் படுத்தபோது, அந்த விசாலமான சமையலறையும் நடக்கநடக்க நீளும் தோட்டமும் அவள் மனத்தில் விஸ்வரூபம் எடுத்தன. அம்மாவின் மெலிந்த தோற்றமோ, அவள் எதிர்கால சுகமோ அவள் மனத்தில் தோன்றி, "அவளுக்காகச் செய்ய வேண்டும்" என்ற தியாக மனப்பான்மை எல்லாம் அவளுக்கு ஏற்படவில்லை. அந்தச் சந்தின் அழுக்கிலிருந்து விடுதலை தரக்கூடிய வாயிலாகத்தான் இதை அவள் எண்ணினாள். அதனால் அவள் அம்மாவும் சுகப்படப்போவது இரட்டிப்பு லாபமாகப்பட்டது. இளமை என்ற ஒன்று உண்டு, அதற்குச் சில ஆசைகள் உண்டு என்பது ஏனோ அப்போது அவளுக்குத் தோன்றவில்லை. ரொட்டித்துண்டு மட்டுமே உள்ள வெற்று வயிற்றில் பருவக்கற்பனைகளை மனத்தில் ஓடவிட அவள் திரையுலகக் கதாநாயகியாக இருக்கவில்லை! அவள் வெறும் பெங்களூர் 'சிக்பெட்' சந்தில் உள்ள ரங்கம்மாவின் பட்டி னிக்குத் துணை வந்தவள். அப்படி இருந்ததால்தான் அவள் அந்த முடிவையும் எடுத்தாள்.

யாருக்கும் அறிவிக்க வேண்டிய அவசியமில்லாமல் அந்தப் பெரிய வீட்டின் முன் கூடத்திலேயே சம்பிரதாயத்துக்கு 'அவன்' கையில்

தாலியைக் கொடுத்து, பின்பு தானே வாங்கிக் கட்டிக் கொண்டு அவள் கல்யாணம் நடந்தது. அவள் மனம் என்னவோ அதற்குப் பின் கிடைக்கப்போகும், அறுசுவை உண்டி பற்றியே எண்ணிக் கொண்டிருந்தது என்றால் மிகையில்லை. அந்தக் கல்யாணத்திலிருந்து வேறு எதை அவள் எதிர்பார்த்திருக்க முடியும்?

தலையைக் கலைத்துக்கொண்டு, உடையைக் கிழித்துக்கொண்டு, அறையில் அடைபட்டுக் கிடந்த அவனிடம் அவளுக்கு மனைவி என்ற முறையில் எந்த அன்பும் தோன்றவில்லை. ஆனால் முகம் சுளிக்காமல் அவள் அவனைக் கவனித்துக் கொண்டாள். ஒவ்வொரு முறை வயிறு நிறைய உண்ணும்போதும், அந்த அறைக்குள்ளிருந்த வனுக்கு நன்றி செலுத்திக் கொண்டாள். வேறு எந்த வகையிலும் பிணைப்பு ஏற்பட வகையில்லாதபோது, இந்த உணர்வே அவன் எந்த வகையிலும் துன்பப்படக் கூடாது என்று அவள் நினைக்கும் அளவுக்கு அவளை அவனிடம் நெருங்க வைத்தது.

சில சமயம் சமையலறையில் அவள் வேலையாக இருப்பாள். அறையிலிருந்து சத்தம் அதிகரிக்கும்போது, "இந்தக் கழுதைப் பயலை இன்னிக்கு உண்டு இல்லைன்னு ஆக்கியுடறேன்" என்று கத்திக் கொண்டே மாமனார் போவது காதில் விழும். அதைத் தொடர்ந்து அடிக்கும் சத்தமும், அவன் ஓலமும் கேட்கும்போது, அந்தக் கூக்கூரல் 'ஜிவ்' வென்று இவள் நரம்புகளில் ஏறி, அவள் உடலின் ஒரு பகுதி ஓலமிடுவதைப் போன்ற உணர்வு அவளுக்கு ஏற்பட்டதுண்டு. ஓரிரு முறைகளுக்குப் பின் ஒருதடவை மாமனார் கோபமாகக் கத்தியவாறே போனபோது, இவள் பாய்ந்து போய் அவர் முன்னால் நின்று கொண்டாள்.

"தயவு செய்து அவரை அடிக்க வாண்டாம்" என்று சொல்லி முடிப்பதற்குள் குரல் கம்மி அழுகை வெடித்துவிட்டது.

சமையலறையில் வேலை செய்ததால் வியர்வைத்துளிகள் நெற்றியில் அரும்ப, வேகமாக வந்ததால் மூச்சு வாங்க அவள் நின்று சொல்லி விட்டுப் பின் உதடுமடங்க அழுததும் மாமனார் மலைத்துப்போய் நின்றார்.

அவள் மீண்டும் சமையலறைக்கு ஓடி வந்துவிட்டாள்.

அன்று ஏன் அவள் அழுதாள் என்பது அவளுக்கே புரியவில்லை. அந்த அறைக்குள்ளிருந்தவன் அவள் பொறுப்பில் இருப்பவன் போலவும், அவளால் அவனுக்குச் செய்யக்கூடியது கருணை காட்டு வது மட்டுமே என்றும் அவளுக்கு மாமனார் முன் நின்று பேசிய அந்தக் கணம் தோன்றியிருக்க வேண்டும். அதிகம் ஆழ்ந்த சிந்தனை களில் மூழ்கியிரா அவள் மனத்தை அந்த எண்ணத்தின் வேகமும், ஆழமும் தாக்கவே அவள் நிலைகுலைந்து அழுதுவிட்டாள். அந்தப் பொறுப்பின் பாரத்தைத் தன் மேல் தானாகவே தன்னையறியாமலே சுமத்திக் கொண்டுவிட்டோமே

என்று அவள் அழுதாள். மூன்றாம் மனிதனுக்குப் பணிவிடை செய்வது போல் செய்துவிட்டு, இந்தச் செல்வத்தின் சுகத்தை அனுபவிக்கும் பொறுப்பில்லா மனம் ஏற்படா மல், ஏன் தொண்டை கிழியக் கத்தும் இந்த மனிதனைக் காப்பது தன் கடமை என்று தோன்ற வேண்டும் என்று அவள் அழுதாள்.

அதற்குப் பின் அவனை யாரும் அடிக்க முயலவில்லை. அதற்குப் பதிலாகச் சத்தம் வந்தவுடன் அவள் அழைக்கப்பட்டாள்.

எந்தஎந்த சந்தர்ப்பங்களில் அவன் எப்படிச் சத்தம்போடுவான் என்பது அவளுக்குப் பழகிவிட்டது. சத்தத்திலிருந்தே அறைக்குள் என்ன நடக்கிறது என்று அவளுக்குப் புரிந்துவிடும் சில சமயம், அவன் குணமாகிவிடலாம் என்ற நப்பாசை கூட, இரவு படுக்கையில் படுத்துக்கொண்டு தோட்டத்திலிருந்து காற்றில் கலந்து வரும் மல்லி கையின் மணத்தை நுகர்ந்தவாறே இருக்கும்போது அவளுக்கு ஏற் படும். திடீரென்று அறையைத் திறந்துகொண்டு அவன் வந்து, அவளைப் பெயர் சொல்லிக் கூப்பிடுவது போல் அவள் எண்ணிக் கொள்வாள்.

அப்போது எல்லாம் எழுந்து போய் அவன் அறையின் ஜன்னல் கதவைத் திறந்து பார்ப்பாள். படுக்கை ஒரு புறமாயும், அவன் ஒரு புறமாயும் அவன் படுத்துக் கிடப்பான். துங்காமல் வெறித்துப் பார்த்தவாறே உட்கார்ந்துகொண்டிருக்கும் நாட்களுமுண்டு.

அர்த்தமில்லா சின்னஞ்சிறு ஆசைகளுக்கு வெள்ளி முலாம் போட்டு பொற்கிரீடம் வைத்து, அவற்றுக்கு நெஞ்சில் அரச பதவியை வாங்கித் தந்துவிடும் இளமை என்னும் மந்திரவாதியின் கைப்பாவை யாய் அந்த ஜன்னல் வழியாக அவளுடைய சொத்தான அவனை அவள் பார்ப்பாள். எல்லோரும் உறங்கியிருக்கும் அந்த இரவு வேளை யில் வெகு நேரம் அப்படி அவள் நின்றதுண்டு.

அந்த அசட்டு நப்பாசைகளெல்லாம் செத்துப்போய் இரண்டு ஆண்டுகளாகிவிட்டன.

இன்று அவனை அடக்கிவிட்டுச் சமையலறையில் அமர்ந்ததும், அப்பளங்கள் பரப்பப்பட்டிருக்கும் ஒரு சிறிய வீட்டில், வறுமை அவள் மென்மைக் குணங்களைக் காவு வாங்கிவிட்டதால் அடிக்கடி எரிந்துவிழும் அம்மாவின் வசவை வாங்கிக் கட்டிக்கொண்டு இருக்க வேண்டும்போல் தோன்றியது. இந்த வீட்டுள் நுழையும் முன்பு பத்து ரூபாய்க்கு முரட்டுக் கைத்தறிச் சேலை – கத்தரிப் பூ நிறத்தில் பூ அச்சிட்டது – அம்மா வாங்கித்தந்தாளே, அதைக் கட்டிக் கொண்டு போய்க் கதவைத் தட்டி அம்மாவை ஆச்சரியத்துக்குள்ளாக்க வேண் டும் என்று தோன்றியது.

அதை நினைத்த மறுவினாடியே, மூடியிருக்கும் ஓர் அறை ஒன்று அவளுக்கு ஞாபகம் வந்தது. பரிதாபகரமான பார்வையுடன் வாய் விட்டுக் கத்தும் அவனை எண்ணிக்கொண்டாள். இங்கே இவர்களி

டம் அடிவாங்கிக் கொண்டு இருக்க அவனை விட்டுப் போக முடியா மல் கருணை அவள் நெஞ்சை அடைத்துக் கொண்டது.

அவள் சமையலறைச் சுவரில் சாய்ந்துகொண்டிருக்கும்போதே இதுவரை அவள் கேட்டறியாத கதறல் அந்த அறையிலிருந்து, வேகமாக ஓடும் வண்டியைத் திடீரென்ற நிறுத்தும் கீச்சு ஓசையுடன் எழுந்தது. அடிவயிற்றில் நெருப்புத் துண்டு ஒன்று புரண்டது. பதறிக் கொண்டு ஓடினாள்.

அவளுக்கு முன்பு மாமியார் சென்றிருந்தாள். ஜன்னலைத் திறந்து பார்த்து, முகமெல்லாம் வெளிற, அவள் ஸ்தூல சரீரம் மெல்ல நடுங்க நின்றிருந்த அவளை நொடியில் அப்புறம் தள்ளிவிட்டுப் பார்த்தாள்.

நெற்றி, கன்னம், முகவாய் எல்லாம் குருதி பெருக அவன் விழுந்து கிடந்தான். சுவரிலிருந்து பறித்த ஆணி ஒன்று வலது கையில் இருந்தது.

பாய்ந்து கதவைத் திறந்து உள்ளே அவனருகே சென்றாள். நொடிக்கு ஆயிரம் உளறும் அவன் பேசாமல் இருந்தான்.

சாதாரணமாக வெறி வரும்போது மற்றவர்களைத்தான் அவன் காயப் படுத்துவான். பல முறைகள் அவன் அறைக்குள் அடைபட் டிருப்பது அவள் மனத்துக்கு வேதனையாக இருந்தாலும், வெளியே வரும் சிலநேரம் அவன் ஆடுவதைப் பார்த்து அவளே பயந்ததுண்டு.

இரண்டாம் பையன் சந்தானம் மேஜைமேல் T சட்டத்தை வைத்துப் படம் வரைந்துகொண்டிருந்த வேளையில் ஒருமுறை கதவை எப்படியோ திறந்துகொண்டு அவன் உள்ளே வந்து ஒரு வார கால வேலையை ஒரு நொடியில் கிழித்தெறிந்தான். சந்தானம் தடுக்க முற்பட்டபோது, அதே சட்டத்தால் நெற்றியில் அடி விழுந்தது. நான்கு வேலைக்காரர்கள் வந்து இழுத்துக் கொண்டுபோனார்கள்.

அவள் சந்தானத்திடம் ஓடினாள். அதற்கு முன்பு வரை அவள் அவனிடம் பேசியதுகூட இல்லை.

“ரொம்ப அடி பட்டுடுத்தா? நான் மருந்துபோடறேன்” கை பஞ்சை யும். டிஞ்சரையும் ஒற்றிப் பரபரவென்று வேலை செய்தது. “யாருக்கு வேணும் மருந்து? அந்த ரூமிலே இருக்கறவன் ஒழிஞ்சாத்தான் இந்த வீட்டுலே நிம்மதி. நான் அவனை வெறுக்கறேன்” என்று மேஜையைக் குத்தினான் சந்தானம்.

அவள் பேசாமல் நின்றுகொண்டிருந்தாள். அந்தத் திட்டுக்கெல் லாம் அவளே உரியவள் போல் பொறுமையாக நின்றுகொண்டிருந் தாள். சந்தானத்தின் வெறுப்பை – ஏன், அந்த வீட்டின் எல்லோரின் வெறுப்பையும் – அவளால் புரிந்து கொள்ள முடிந்தது.

அவளைப் பார்த்துவிட்டு மேலும் கத்தினான் சந்தானம். “நீ ஒண்ணும் ‘உம்’ முனு நிக்க வேண்டாம். நான் சொல்றது தப்பு மாதிரி பார்க்கவேண்டாம்.”

"நான் நீங்க சொல்றது தப்புனு சொல்லலையே? அவர் அப்படி இருக்கறதுனால்தானே நான் இப்படி உங்க முன்னாலே நின்னு பேச முடியறது? இல்லாட்டா இந்த வீட்டுலே நுழைய எனக்கு ஏது யோக்யதை? பாலாவும் தயிராவும் நான் சாப்பிடறேனே, அதுக்காகவாவது அவருக்கு விழற வசவை நான் ஏத்துக்க வேண்டாமா? உங்க வீட்டு ஜூலி கூட சாப்பாடு போட்டவுடன் வாலை ஆட்டறதே?" என்றாள் அவள்.

அதன் பின்பு அவன் அறை எப்போதுமே ஜாக்கிரதையாக மூடப்பட்டது அவளால்.

இப்படி மற்றவர்களை ஹிம்ஸை செய்து அட்டூழியம் செய்த அவன், எல்லாக் கோபத்தையும் தன் மேலேயே காட்டிக்கொண்டு விழுந்து கிடந்தான்.

"மாமி மூச்சு இல்லையே மாமி..." என்றாள்.

"பாவி, பாவி! இப்படிச் செய்துட்டானே? ரத்தத்தைப் பார்த்தாலே எனக்கு ரத்தக் கொதிப்பு வந்தூடுமே...!"

அவனை வழக்கமாகக் கவனிக்கும் டாக்டர் இந்நேரம் ஆஸ்பத்திரியில் இருப்பார். ஃபோன் செய்து பயனில்லை. யாரும் எடுக்க மாட்டார்கள். எடுத்தாலும் அவர் இல்லை என்று விடுவார்கள்.

"நீங்க இங்கே இருங்கோ. நான் டாக்டரைக் கூட்டிண்டு வரேன்" என்று விட்டு எழுந்தாள்.

வெளியே வந்து டிரைவரைக் காரை எடுக்கச் சொன்னாள். "வேகமாக, வேகமாக" என்று பரபரத்தாள்.

அதிர்ஷ்டவசமாக ஆஸ்பத்திரி வாயிலில் டாக்டர் அகப்பட்டார்.

"டாக்டர், டாக்டர், மல்லேஸ்வரம் 6வது மெயின்ரோடுக்கு வரணும். உங்க பேஷண்டுதான். பேச்சுமூச்சில்லை டாக்டர்" என்று நாக்குழறக் கூறினாள்.

அவளை ஒருமுறை பார்த்துவிட்டு மருந்துப் பையுடன் காருக்குள் நுழைந்தார்.

"என்னம்மா ஆச்சு?"

"தன்னையே ஆணியாலே குத்திண்டுட்டார் டாக்டர்."

"பேசாம ஆஸ்பத்திரியிலே சேர்த்துட்டு நிம்மதியா இருக்கலாம்."

அவள் பதில் பேசவில்லை. அப்போது பேச எந்தச் சொற்களும் அவள் மனத்தில் உருவாகவில்லை. ஓராயிரம் சொற்கள் ஒரேயடியாக மனத்தில் எழுந்து புகையாய்ப் பிசுபிசுத்துப் போயின. குருதி படிந்த அந்த முகம் மனத்தில் தோன்றி எல்லா எண்ணங்களையும் அந்தக் குருதியே அடித்துப்போயிற்று.

கார் வீட்டை அடைந்ததும் துள்ளிக் குதித்து வீட்டை நோக்கி ஓடினாள். டாக்டரால் அவளை எட்டிப் பிடிக்க முடியவில்லை.

அவன் அறையை நோக்கிப் பறந்தாள்.

"என்ன ஆயிற்று மாமி? எப்படி இருக்கார்?" என்றாள். மாமியார் பதில் சொல்லும் முன் டாக்டர் உள்ளே நுழைந்தார். எதுவும் பேசாமல் அவனைப் படுக்கையில் கிடத்தினார். ரத்தத்தைத் துடைத்து மருந்திட்டார். கையில் ஊசி போட்டார். சிறிது நேரம் கழித்து அவன் கண் விழித்தான்.

"கவனமாப் பார்த்துண்டா ஒண்ணும் ஆகாது. நல்ல ஜுரம் அடிக்கும். மருந்து ஒழுங்கா தரணும். நர்ஸ் அனுப்பி வைக்கட்டுமா?"

"நானே பாத்துப்பேன் டாக்டர்."

"சரி. நான் மருந்து கொடுத்தனுப்பறேன்."

மாமியாருடன் அவர் வெளியே போனார்.

"அம்மா, தன்னையே தாக்கிக்கற திருப்பம் இது. இனிமே ஒரு ஊசியைக்கூட நீங்க அவன் பக்கம் வைக்க முடியாது. ஏன் இந்தக் கஷ்டம்? பேசாமே ஆஸ்பத்திரிலே சேர்த்துடுங்கோ. மாசாமாசம் பணம் கட்டினா போதும்." என்று டாக்டர் கூறுவது காதில் விழுந்தது.

"குணமே ஆகாதுன்னுதான் சொல்லிட்டேளே? அப்புறம் ஆஸ்பத்திரிலே சேர்த்து என்ன பிரயோஜனம்?"

"அவனுக்கும் பாதுகாப்பு. உங்களுக்கும் சௌகரியம். அப்புறம் உங்க இஷ்டம்."

கண்விழித்தும் தன் வசத்தில் இல்லாமல் சோர்வுற்றிருக்கும் அவனை அவள் பார்த்தாள்.

"இப்படிப் பண்ணிக்கலாமா? இப்படிப் பண்ணிக்கலாமா?" என்று மிருதுவாக அவனுக்குப் புரிய வைப்பது போல கேட்டாள். பாதி நீலமும், பாதி ரோஜா வண்ணமுமாய் வீங்கிக் கிடந்த முகத்தைத் தடவித்தந்தாள்.

சிறிது நாழிகைக்குப் பிறகு டாக்டரின் சொந்த மருத்துவசாலையில் பணியாற்றும் பெண் ஒருத்தி மருந்துடன் வந்தாள்.

"இந்த மருந்து ஜுரம் ஜாஸ்தியானா தரணும். இது ஒழுங்கா நாலு டோஸ் இன்னிக்கு ராத்திரி கண் விழிச்சுத் தரணும். உங்களாலே முடியுமா? இல்லே, நான் இருக்கட்டுமா? அப்புறமா ஏதாவது ஆனா டாக்டர் ஓடி வரணும்."

"நான் மருந்து ஒழுங்காய்த் தருவேன். நீங்க இருக்க வேண்டாம்."

அவன் அப்படிச் சோர்வாகவே நிறைய நாட்கள் இருக்க வேண்டும் போல் அவளுக்கு ஓர் அசட்டு ஆசை ஏற்பட்டது. பைத்திய

மாக அல்லாமல், பாதி நினைவுடன் அவள் கைக்கு அடங்கிய வனாக அவன் படுத்திருந்தது முட்புதர்களுக்கு நடுவே ஒரு பசுந் தழையாய் அவள் மனத்தைக் குளிர்வித்தது. அதே சமயம் அவன் விழித்து இதே அறையில் சத்தம் போட்டுக்கொண்டு இருந்தால்கூட போதும், இப்படி பலவீனமாகப் படுத்திருக்க வேண்டாம் என்றும் தோன்றியது.

சந்தானம், அவனுக்கு மூத்தவன் பாலாஜி இருவரும் வந்து பார்த்து விட்டுப் போனார்கள். மாமனார் வந்து பார்த்துவிட்டு, "தன்னையே அடிச்சுக்க ஆரம்பிச்சாச்சா? எல்லாம் என் போன ஜன்ம விதிப் பயன்" என்று தலையில் அடித்துக்கொண்டார்.

மருந்து நேரப்படி தர சந்தானத்தின் அறையில் அவள் பார்த்திருந்த மேஜைக் கடியாரத்தை எடுத்துவரப் போனாள்.

சந்தானத்தின் அறைக் கதவு சாத்தியிருந்தது. உள்ளே பேச்சுக்குரல் கேட்டது. சாவித்துவாரத்தின் வழியாகக் குனிந்து பார்த்தாள்.

சந்தானம் மேஜைமேல் ஏறி உட்கார்ந்துகொண்டிருந்தான். பாலாஜி நாற்காலியில். மாமனாரும், மாமியாரும் வேறு இரு நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தனர். சந்தானம் ஆரம்பித்திருந்த வாக்கியத்தின் கடைசிப் பகுதி மட்டுமே அவள் காதுக்கு எட்டியது.

"... இல்லையா நம்பகிட்டே? இப்படி வீட்டிலேயே வெச்சுண்டு ஏன் அவதிப்படணும்?"

"ஆஸ்பத்திரிக்கு அனுப்பினா வீண் செலவுதான். குணமாகா தாமே?"

பாலாஜி குறுக்கிட்டான். "செலவானா பரவாயில்லை அம்மா. நாளைக்கு என்னோடு வேலையில் இருப்பவர்களை இங்கே நான் எப்படி அழைச்சுண்டு வரமுடியும்? எனக்கு ஒரு அந்தஸ்து இல்லையா?"

"வாழ்நாள் முழுசும் அவன் இப்படித்தான் இருக்கப்போறானாம். டாக்டர் சொல்லறார். இப்படியே ரூமிலே போட்டு வைக்க முடியுமா? அதுவும் தன்னையே அடிச்சுக்க ஆரம்பிச்சிருக்கான். எவ்வளவு ஜாக்கிரதையா பார்த்துக்கணம் தெரியுமா?"

"அந்தப் பொண்ணு பார்த்துப்பாடா."

"அந்தப் பொண்ணு! அவளை இங்கே கூட்டிண்டு வந்தயே அதுதான் முதல் தப்பு. அவள் அவனை ஏன் கவனிச்சுக்க மாட்டா? அவன் இருக்கிற வரைக்கும் தானே அவளுக்கு இங்கே இடம்?" பாலாஜி ஆத்திரத்துடன் கூறினான்.

"அம்மா, அவன் பைத்தியம் முத்திப் போயிடுத்து. இனிமே அவளை அனுப்பிவிட வேண்டியதுதான். அவகிட்டே ஆயிரம், ரெண்டாயிரம் குடுத்துட்டுப் போகச் சொல்லு. பெங்களூரை விட்டுப் போனா அவளுக்கு வேற கல்யாணம்கூட ஆகலாம்". இது சந்தானம்.

அவன் சொன்னதில் எந்த விரஸமும் இருப்பதாக அவளுக்குப் படவில்லை. ஒருவேளை இந்த வீட்டிலிருந்து அவள் அனுப்பப்பட்டால் அவள் மனமே அப்படி நினைக்கலாம். ஆனால் அந்த அறைக்குள்ளிருந்தவன் அவள் தோழன். அவனுக்கு அவள் கடமைப்பட்டவள். அவன் எங்கோ கதறிக் கொண்டு இருக்கும் வரை அந்தக் கதறல் அவள் நெஞ்சத்தில் மோதிக்கொண்டே இருக்கும். அவள் கழுத்தில் தொங்கும் அந்தச் சின்னத்திற்காக அவள் அப்படி உணர்ந்தாள் என்று இல்லை. அவனைக் கவனித்துக்கொள்ள வெறும் வேலைக்காரியாய் அவள் நியமிக்கப்பட்டிருந்தாலும் இதே அளவு பிணைப்பு அவளுக்கு ஏற்பட்டிருக்கும் என்று அவளுக்குப் பட்டது.

இதுவரை பேசாமலிருந்த மாமனார் பேசினார். "அந்தப் பொண்ணுகிட்டே நான் பேசிக்கறேன். இந்தத் தடவை நிஜமாகவே அவனுக்கு ஜாஸ்தியாகிவிட்டது. இனிமே அவனை நம்பளாலே சமாளிக்க முடியாது. அனுப்பிவிட வேண்டியதுதான்."

வேறு விஷயங்களைப் பற்றி அவர்கள் பேச ஆரம்பித்த பிறகு மெல்ல அவள் அறைக் கதவைத் தட்டினாள். சந்தானம் திறந்தான்.

"என்ன வேணும்?"

"கடிகாரம். மருந்து தரணுமே?"

அவன் மேஜையில் இருந்த கடிகாரத்தை எடுத்துத் தந்தான். அதைப் பெற்றுக் கொண்டு மீண்டும் 'அவன்' அறைக்குள் நுழைந்து கதவை மூடிக்கொண்டாள்.

அவன் தலையைத் தன் மடியில் கிடத்திக்கொண்டாள். அவனைக் குனிந்து பார்த்தாள். "இவருக்கு என்ன வயதிருக்கும்?" என்று விசித்திரமான சந்தேகம் வந்தது. முப்பத்தைந்து இருக்கும். அதற்கு மேலும் இருக்கலாம். இனி மீதி வாழ்நாளை ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் உக்கிரமான பைத்தியங்கள் இருக்கும் பகுதியில் இருக்கப் போகும் அவன் நிலையை எண்ணிப் பார்த்தாள். வயது ஏறஏற, வலு குறைந்து தன்னைத் தாக்கிக்கொள்ளவோ, மற்றவரைத் தாக்கவோ சக்தி இல்லாமல் போகும்போது மீண்டும் அவன் இங்கே இந்த அறையில் அடைபடலாம்.

சந்தானமும், பாலாஜியும் அப்பொழுது குடும்பஸ்தர்களாக இருப்பார்கள். அவர்கள் குழந்தைகள் இந்த ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்து, "பைத்தியக்கார பெரியப்பா..." என்று கூவி அழைக்கலாம். "அப்படிச் சொல்லக்கூடாது" என்று கண்டிக்க யாரும் இல்லாமல் போகலாம். அல்லது கடைசிவரை அந்தப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியே அவன் உலகமாகி விடலாம்.

அவன் கேசத்தை அவள் வருடித்தந்தாள். எவ்வளவு சுலபமாக அவன் விதியை அவர்கள் நிர்ணயித்துவிட்டார்கள்! அவளுடையதையும் கூட. இந்த மடியில் படுத்திருப்பவனுக்கு அவள் வாழ்வு

அவனால் மாறியதும், இன்று மீண்டும் அவனால் மாறப்போவதும் எப்படித் தெரியும்? ஆனால் அவனுக்கு அவளைக் கட்டாயம் நினைவு வரும். எங்கேயோ மன இருட்டில் தத்தளித்துக் கொண்டிருக்கும் போது, மென்மையான இரு கரங்கள் கலங்கலாக அவன் ஞாபகத்துக் குக் கட்டாயம் வரும் என்பதில் அவளுக்கு அசாத்திய நம்பிக்கை இருந்தது. அந்த வீட்டிலேயே அவளிடம் அவன் அதிக அன்பைப் பெற்றிருந்தான். அத்தனை அன்பும் எப்படி வீணாக முடியும்? அந்த அன்பின் சிறு கீதங்கள் அந்தப் பைத்தியக்கார மனத்தில்கூட எப்போதாவது ஒலிக்கும்.

மாறப்போகும் தன் வாழ்வை அவள் எண்ணிக்கூடப் பார்க்க வில்லை. அதை அமைத்துக்கொள்வது சிரமமான காரியமாக அவளுக்குப் படவில்லை. ஏதாவது டீச்சர் உத்தியோகத்துக்கான படிப்பைப் பெறலாம். அவை சின்ன விஷயங்கள். இவர்கள் தரப் போகும் பணத்தால் தீரப்போகும் விஷயங்கள். அந்த சிக்பெட் சந்தின் நாற்றம் போதாது என்று இவளைப் பற்றிய வம்புகளும் இனிமேல் அங்கே மணக்கும். அடுத்த வீட்டு ரவியோடு அவள் பேசினால் எதிர்வீட்டு ராயர் மாமியின் விழிகள் பிதுங்கும்.

"அந்தப் பொண்ணுக்குக் கல்யாண ஆசை வந்துடுத்து" என்று கௌரம்மாவிடம் சென்று கரிசனமாகக் கூறுவாள்.

மாதா மாதம் முன்னறை வாசற்படி அருகே ஓர் ஓரத்தில் அவள் அமரும் நாள் தள்ளிப் போய்விட்டால், வாயைக் கிண்டினால் எல்லாவற்றையும் கொட்டிவிடும் அம்மாவிடம் வந்து, "என்ன ஆச்சு? நீங்க ஜாக்ரதையா இருக்கணும் மாமி. காலம் கெட்டுப் போயிடுத்து" என்று அவள் வயிற்றில் புளியைக் கரைக்க வைப்பார்கள். ஆ! அப்பா இறந்த மூன்று வருடங்கள் அவள் அனுபவிக்கவில்லையா?

அந்தச் சந்தின் ஆண்கள் மட்டும் என்ன உயர்த்தி? அவள் சிறு பெண்ணாக இருந்தபோது நடந்த அந்தச் சம்பவம் அவளுக்கு இன்னும் மறக்கவில்லை.

ராயர் மாமா எப்போதும் இவளைக் கூப்பிட்டு பழம், ரொட்டி எல்லாம் கொடுத்து "உங்க அம்மாகிட்டே குடு" என்பார். அம்மா விடம் கொடுத்தால் முதுகில் பழம் வர வைத்துவிடுவாள் என்று தெரியும். இவளே தின்றுவிடுவாள். சிநேகிதிகளுடன் பகிர்ந்துகொள் வதும் உண்டு. ஒரு முறை அவர் சிவப்புப் பட்டு ரவிக்கைத் துண்டு ஒன்றை அவளிடம் தந்து, "உன் அம்மாகிட்டே குடுத்துடு. மாமி ஊரிலே இல்லேன்னு சொல்லு" என்றார்.

அம்மாவிடம் சென்று அவள் சொன்னதுதான் தாமதம், அம்மா அவளையும் இழுத்துக்கொண்டு விடுவிடுவென்று ராயர் வீட்டில் புகுந்தாள். மாலையில் குளிக்க நீர் சுடப்பண்ண ராயர் குளியலறை யின் பெரிய தவலைக்கு அடியே விறகு வைத்து எரிய விட்டிருந்தார்.

கன்னடப் பாடல் ஒன்றை உரக்கப் பாடிக்கொண்டு அதன் எதிரிலே குந்தி உட்கார்ந்திருந்தார்.

அந்தச் சிவப்பு ரவிக்கைத் துண்டை அந்த அடுப்பில் திணித்தாள் அம்மா. பிறகு ஏதோ கத்தினாள். அந்த வயதில் அது புரியாததாலோ என்னவோ சொற்கள் நினைவில்லை. நெருப்பில் கருகிக்கொண் டிருந்த ரவிக்கைத் துண்டைச் சுட்டிக் காட்டி, அதைவிடச் சிவப்பாகக் கண்கள் ஒளிர, இன்னொரு கையை நெஞ்சின் மீது வைத்து நின்று கொண்டிருந்த அம்மாவின் உருவமும், எண்ணெய் தடவிய உடம்பு டன் பிரமித்துப் போய் நின்ற ராயரின் உருவமும் மறக்கவில்லை இன்னமும்.

இப்போது மட்டும் அந்தச் சந்து மாறிவிடப் போகிறதா என்ன? ராயர் இல்லாவிட்டால் எவனாவது ராவ்ஜி வந்து விட்டுப்போ கிறான். அந்தச் சந்தின் வம்பும், அவதூறு பேசும் நாக்குகளும் ஏனோ அவளுக்குப் பழைய பயத்தை உண்டாக்கவில்லை. அவளை யறியாமல் ஒரு மகாராணியின் கம்பீரம் அவள் மேல் வந்து கவிந்து கொண்டது போல் அவள் உணர்ந்தாள். தன் ஒரு பார்வையாலேயே அங்குள்ள அத்தனை பேரையும் சாம்பலாக்கிவிடும் பலம் அவளிடம் வந்து சேர்ந்துவிட்டது எப்படியோ.

அந்தக் குறுகிய சந்து, அதைச் சுற்றியிருந்த குறுகிய மனங்கள் எதுவும் அந்தக் கணம் அவள் மனதைப் பாதிக்கவில்லை. அந்த வாழ்க்கைக்கு மீண்டும் போகிறோமே என்ற தாபம் சிறிதளவுகூட எழவில்லை. தன் மடியில் தலை வைத்துப் படுத்திருந்தவனைப் பற்றிய எண்ணமே அவள் மனத்தை வியாபித்திருந்தது.

அவளுக்கு மனம் இருந்தது. சிந்தனை இருந்தது. புழுவாக மற்றவர் கள் நடத்தினாலும் வாழ வேண்டும் என்ற துடிப்பு இருந்தது. இவனுக்கு என்ன இருக்கிறது? வாழ்நாள் முழுவதும் ஓர் அறையினுள் கத்திக்கொண்டோ, தன்னையே தாக்கிக்கொண்டோ இன்னும் எத்தனை வருடங்கள் இவன் வாழ வேண்டும்?

அவள் வீடிருக்கும் சந்தின் முனையில் ஓர் அரச மரமும் அதைச் சுற்றி மேடையும் உண்டு. அங்கு படியருகே எப்போதும் நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு கறுப்பு நாய் ஒன்று உட்கார்ந்திருக்கும் சில வருடங்களுக்கு முன்னால். பள்ளியிலிருந்து வரும்போது அதன் வாலை இழுத்து விளையாடாமல் எந்தக் குழந்தையும் வீட்டுக்குப் போகாது. ஞாயிற்றுக் கிழமை ஒருநாள் அம்மாவோடு அப்பளம் இட்டுக்கொண்டிருந்தபோது அதன் ஓலம் கேட்டது. எழ நினைத்த அவளை அம்மா அடக்கிவிட்டாள்.

"அந்த நாய்க்கு வெறி பிடிச்சுடுத்து. அதனாலே தடியாலே அடிக் கறா. நாய் வண்டி வந்து பிடிச்சுண்டு போயிடும் கொஞ்ச நாழியிலே. நீ போகாதே" என்றாள்.

"அதைக் கொன்னுடுவாளாம்மா?" என்று கேட்டுவிட்டு ஹோ வென்று அழுதாள் அவள்.

"இல்லாட்டா அதுக்கும் கஷ்டம். மற்றவாளுக்கும் கஷ்டம் இல்லையா? கடிச்சுடுமே சனியன்" என்றாள் அம்மா.

அவள் அப்பளம் இடுவதை நிறுத்திவிட்டு அந்தக் கருப்பனுக்காக முழங்காலைக் கட்டிக்கொண்டு அழுதாள்.

இந்த வீட்டில் இருப்பவர்களுக்குத் தாங்கள் கருணைமனம் படைத்தவர்கள் என்ற எண்ணம். அதனால்தான் ஏதோ ஆஸ்பத்திரியில் இவனை உழல விடப்போகிறார்கள். இந்தக் குழப்பத்திலேயே, யாரும் இல்லாதவனாக, அவனை நீடிக்க விடப்போகிறார்கள். அவள் ஆதரிக்க அருகில் இல்லாத ஓர் இடத்தில் அவன் இருப்பதை அவளால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. தன்னத்தனியனாய் அவன் ஓர் ஆஸ்பத்திரியில் அலைவதை அவளால் நினைத்துப்பார்க்க முடியவில்லை. அந்த ஆஸ்பத்திரியில் இருப்பவர்கள் எல்லாம் பைத்தியங்கள் இல்லையோ? தற்சமயம் பாதி நினைவோடு படுத்திருக்கும் அவனை அந்த மற்றப் பைத்தியங்களைப் போல் ஒருவனாக அவளால் எண்ண முடியவில்லை. இந்த ஜுரத்திலிருந்து விழித்ததும் தொண்டை கமறக் கத்தும் ஒருவனாய், சந்தானம், பாலாஜி எல்லாருக்கும் வேண்டப்படாதவனாய், பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சேரப்போகும் ஒருவனாய் அவன் மாறிவிடுவான் என்ற நினைவு வந்ததும் அவன் மேல் அவளுக்குப் பரிதாபம் மிகுந்தது.

இந்த ஜுரத்திலிருந்து அவன் மீளாவிட்டால்? சாட்டையால் அடிக்கப் பட்டது போல் அவள் உடல் சிலிர்த்து நடுங்கியது.

அவன் மீள வேண்டும் என்று சொல்லிக்கொண்டாள்.

எதற்காக? மீண்டும் துணியை அவிழ்த்துக்கொண்டு ஓடவா? அவள் கூட அருகில் தடை செய்ய இல்லாமல் அடிவாங்கவா? பைத்தியக்கார விடுதியில் மெல்லச் சாகவா?

அவன் தயவில் அவள் சாப்பிட்ட உணவெல்லாம் நெஞ்சுவரை அடைத்தது. அவனுக்கு அவள் காட்டக்கூடியதெல்லாம் வெறும் அனுதாபம்தான். பரிவுதான். அன்புதான். அது எந்த வடிவில் வெளிப்படவேண்டும் என்பது அவளே தீர்மானம் செய்ய வேண்டிய ஒன்று. எது கருணை, எது கொடூரம் என்பதை நிர்ணயிக்க வேண்டியது அவள்தான்.

முக்காலி மீது அவள் வைத்திருந்த கடிகாரத்தைப் பார்த்தாள். மடியில் கிடந்த அவன் முகம் ஜுர வேகத்தில் மேலும் சிவந்து கிடந்தது. வாய் அரற்றிக் கொண்டிருந்தது. அவள் அவன் கேசத்தில் விரலிட்டு அளைந்தவாறே உட்கார்ந்திருந்தாள். அவன் உடல், முகம் எல்லா

வற்றையும் மெல்ல வருடினாள். அவன் தலை வைத்திருந்த தொடை மரத்துப் போயிற்று. பலமணி நேரங்கள் அவன் அவள் மடியில், அவள் அன்புக்குரியவனாய்க் கிடந்தான்.

அந்நிலையிலேயே சுவரில் சாய்ந்து அவள் தூங்கியே போய்விட்ட போது, இதுவரை உணரா தண்மை அவள் விரல்களில் ஊடுருவியது. திடுக்கிட்டு விழித்து அவன் நாசியருகே விரல் வைத்துப் பார்த்தாள். தலையைக் கவிழ்த்து அவன் நுதலில் தன் இதழ்களைப் பதித்தாள். ஒரு பெருமூச்சுடன் அவன் தலையைக் கீழே வைத்தாள்.

தொடையை நீவி விட்டுக்கொண்டாள், மெல்ல எழுந்து முக்காலியில் இருந்த மருந்துக்குப்பியை அறையோடு இணைந்திருந்த குளியலறையின் தொட்டியில் கவிழ்த்தாள். பிறகு மீண்டும் அதை முக்காலியில் வைத்தாள்.

அதற்குப் பிறகு, அந்த அறையிலிருந்தவனை வெளியேற்றுவதற்கான ஆயத்தங்களை அந்த வீட்டிலிருந்தவர்களிடம் செய்யச் சொல்ல அந்த அறைக் கதவைத் திறந்தாள். வெளியே இருந்த சுதந்திரமான காற்று இதுவரை மூடியிருந்த அந்த அறையினுள்ளே வீசியது.

**'கணையாழி' ஜனவரி 1972**